உ
ஸ்ரீ கோமத்யை நம:



# ॥ श्री गोमत्यम्बाष्टकम् ॥

ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய

# ॥ ஸ்ரீ கோ³மத்யம்பா³ஷ்டகம் ॥

தமிழ் உரை:
ஞானபாஸ்கர, சிவோத்கரஷவர்ஷக
**P.N. நாராயண சாஸ்திரிகள்**

**भूकैलासे मनोज्ञे भुवनवनवृते नागतीर्थोपकण्ठे**
**रत्नप्रकारमध्ये रविचन्द्रमहायोगपीठे निषण्णम् ।**
**संसारव्याधिवैद्यं सकलजननुतं शङ्खपद्मार्चिताङ्घ्रिं**
**गोमत्यम्बासमेतं हरिहरवपुषं शङ्करेशं नमामि ॥**

**பூ⁴கைலாஸே மனோஜ்ஞே பு⁴வனவனவ்ருதே நாக³தீர்தோ²பகண்டே²**
**ரத்னப்ரகாரமத்⁴யே ரவிசந்த்³ரமஹாயோக³பீடே² நிஷண்ணம் ।**
**ஸம்ஸாரவ்யாதி⁴வைத்³யம் ஸகலஜனனுதம் ஶங்க²பத்³மார்சிதாங்க்⁴ரிம்**
**கோ³மத்யம்பா³ஸமேதம் ஹரிஹரவபுஷம் ஶங்கரேஶம் நமாமி ॥**

பூசைலாசமெனப்படும் சங்கரநாராயணர் கோவிலில் உலகமாகிற காட்டிஞல் சூழப்பெற்றதும், நாகதீர்த்த மெனப்படும் குளத்தின் அருகிலுள்ளதும், அருகிலுள்ள தும், ரத்தினங்களாவான பிராகாரத்தின் நடுவில் உள்ளதுமான சூரிய, சந்திரராகிற யோகபீடத்தில் வீற்றிருப்பவரும், சங்கு, தாமரை முதலிய ரேகைகளைத் திருவடி யில் கொண்டவரும், பிறப்பிறப்பு என்கிற நோய்க்கு வைத்தியராயும், கோமதி அம்பாளுடன் கூடியவரும், முக்கண்ணன், திருமால் இரண்டையும் ஒரே உருவத்தில் கொண்டவருமான ஸ்ரீசங்கரேச்வரரான ஸ்ரீசங்கரலிங்கரை வணங்குகின்றேன்.

**लक्ष्मीवाणीनिषेविताम्बुजपदां लावण्यशोभां शिवां**
**लक्ष्मीवल्लभपद्मसम्भवनुतां लम्बोदरोल्लासिनीम् ।**
**नित्यं कौशिकवन्द्यमानचरणां ह्रीङ्कारमन्त्रोज्ज्वलां**
**श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत्सदा गोमतीम् ॥ १ ॥**

**லக்ஷ்மீவாணீநிஷேவிதாம்பு³ஜபதா³ம் லாவண்யஶோபா⁴ம் ஶிவாம்**
**லக்ஷ்மீவல்லப⁴பத்³மஸம்ப⁴வனுதாம் லம்போ³த³ரோல்லாஸினீம் ।**
**நித்யம் கௌஶிகவந்த்³யமானசரணாம் ஹ்ரீங்காரமந்த்ரோஜ்ஜ்வலாம்**
**ஶ்ரீபுந்நாக³வனேஶ்வரஸ்ய மஹிஷீம் த்⁴யாயேத்ஸதா³ கோ³மதீம் ॥ 1 ॥**

லக்ஷ்மி, ஸரஸ்வதி முதலியவர்களால் நன்கு தொழப்பட்ட திருவடித் தாமரைகளை உடையவளும், திருமால், நான்முகன் ஆகியோர்களால் துதிக்கப்பட்டவளும், தன் குமாரனை விநாயகரைக் கண்டு மகிழ்பவளும், தினமும் கௌசிகரால் வணங்கப்பட்ட திருவடிகளை உடையவளும், "ஹ்ரீம்" என்னும் மந்திரத்தில் ஒளிவிட்டு விளங்குபவளும், புன்னைகவனத்தின் தலைவரின் மனைவியாய் விளங்குகிற ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**देवीं दानवराजदर्पहरिणीं देवेन्द्रसम्पत्प्रदां**
**गन्धर्वोरगयक्षसेवितपदां श्रीशैलमध्यस्थिताम् ।**
**जातीचम्पकमल्लिकादिकुसुमैः संशोभिताङ्घ्रिद्वयां**
**श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत्सदा गोमतीम् ॥ २ ॥**

**தே³வீம் தா³னவராஜத³ர்பஹரிணீம் தே³வேந்த்³ரஸம்பத்ப்ரதா³ம்**
**க³ந்த⁴ர்வோரக³யக்ஷஸேவிதபதா³ம் ஶ்ரீஶைலமத்⁴யஸ்தி²தாம் ।**
**ஜாதீசம்பகமல்லிகாதி³குஸுமை: ஸம்ஶோபி⁴தாங்க்⁴ரித்³வயாம்**
**ஶ்ரீபுந்நாக³வனேஶ்வரஸ்ய மஹிஷீம் த்⁴யாயேத்ஸதா³ கோ³மதீம் ॥ 2 ॥**

பண்டன் முதலான அரக்கர் தலைவர்களின் கொழுப்பை அடக்கியவளும், மூவுலகத்துத் தலைவனை இந்திரனுக்கு ஒப்பான செல்வத்தைக் கொடுப்பவளும், கந்தர்வர், யக்ஷர், உரகர் முதலியவர்களால் தொழப்பட்ட திருவடிகளை உடையவளும், ஜாதி, சம்பகம், மல்லிகை ஆகிய மலர்களால் பூஜிக்கப்பட்ட திருவடிகளை உடையவளும், புன்னைகவனத்தின் தலைவரின் மனைவியும் தேவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**उद्यत्कोटिविकर्तनद्युतिनिभां मौर्वीं भवाम्भोनिधेः**
**उद्यत्तारकनाथतुल्यवदनामुद्योतयन्तीं जगत् ।**
**हस्तन्यस्तशुकप्रणाळसहितां हर्षप्रदामम्बिकां**
**श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत्सदा गोमतीम् ॥ ३ ॥**

**உத்³யத்கோடிவிகர்தனத்³யுதினிபா⁴ம் மௌர்வீம் ப⁴வாம்போ⁴நிதே⁴:**
**உத்³யத்தாரகநாத²துல்யவத³நாமுத்³யோதயந்தீம் ஜக³த் ।**
**ஹஸ்தன்யஸ்தஶுகப்ரணாளஸஹிதாம் ஹர்ஷப்ரதா³மம்பி³காம்**
**ஶ்ரீபுந்நாக³வனேஶ்வரஸ்ய மஹிஷீம் த்⁴யாயேத்ஸதா³ கோ³மதீம் ॥ 3 ॥**

உதயமாகிற கோடிக்கணக்கான சூரியர்களுக்கொப்பான ஒளியை உடையவளும், பிறவிக்கடலைத் தகர்த்தெறிபவளும், உதயமாய்க் கொண்டிருக்கின்ற நக்ஷத்திரக்கூட்டங்களின் தலைவனான சந்திரன் போன்ற முகத்தை உடையவளும், உலகத்தை விளங்கச் செய்பவளும், கிளியையும், தாமரைப் பூவையும் கையில் கொண்டு பக்தர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிற புன்னாகவனத் தலைவரின் மனைவியான ஸ்ரீ கோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

**कल्याणीं कमनीयमूर्तिसहितां कर्पूरदीपोज्ज्वलां**
**कर्णान्तायतलोचनां कळरवां कामेश्वरीं शङ्करीम् ।**
**कस्तूरितिलकोज्ज्वलां सकरुणां कैवल्यसौख्यप्रदां**
**श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत्सदा गोमतीम् ॥ ४ ॥**

**கல்யாணீம் கமனீயமூர்திஸஹிதாம் கர்பூரதீ³போஜ்ஜ்வலாம்**
**கர்ணாந்தாயதலோசனாம் களரவாம் காமேஶ்வரீம் ஶங்கரீம் ।**
**கஸ்தூரிதிலகோஜ்ஜ்வலாம் ஸகருணாம் கைவல்யஸௌக்²யப்ரதா³ம்**
**ஶ்ரீபுந்நாக³வனேஶ்வரஸ்ய மஹிஷீம் த்⁴யாயேத்ஸதா³ கோ³மதீம் ॥ 4 ॥**

கல்யாணியாயும் மிகவும் அழகான திருமேனியைக் கொண்டவளும், கர்ப்பூர தீபங்களால் பிரகாசிக்கிறவளும் காது வரையில் நீண்ட கண்களை உடையவளும், இனிமையான குரலையுடையவளும், காமேச்வரியாயும், சங்கரியாயும், கஸ்தூரிப் பொட்டால் விளங்குகிறவளும், கருணையுடன் கூடியவளும் மோக்ஷம் என்னும் அழியாத ஸௌக்கியத்தைக் கொடுப்பவளும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்

**वैडूर्यादिसमस्तरत्नखचिते कल्याणसिंहासने**
**स्थित्वाऽशेषजनस्य पालनकरीं श्रीराजराजेश्वरीम् ।**
**भक्ताभीष्टफलप्रदां भयहरां भण्डस्य युद्धोत्सुकां**
**श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत्सदा गोमतीम् ॥ ५ ॥**

**வைடூ³ர்யாதி³ஸமஸ்தரத்நக²சிதே கல்யாணஸிம்ஹாஸனே**
**ஸ்தி²த்வா(அ)ஶேஷஜனஸ்ய பாலனகரீம் ஶ்ரீராஜராஜேஶ்வரீம் ।**
**ப⁴க்தாபீ⁴ஷ்டப²லப்ரதா³ம் ப⁴யஹராம் ப⁴ண்ட³ஸ்ய யுத்³தோ⁴த்ஸுகாம்**
**ஶ்ரீபுந்நாக³வனேஶ்வரஸ்ய மஹிஷீம் த்⁴யாயேத்ஸதா³ கோ³மதீம் ॥ 5 ॥**

வைடூர்யம் முதலிய எல்லா ரத்தினங்களாலும் அமைக்கப்பட்ட ஸிம்மாஸனத்தில் அமர்ந்து உலக ஜனங்களைக் காப்பவளும், ராஜ ராஜர்களுக்குத் தலைவியாயும், பக்தர்களின் இஷ்டத்தைக் கொடுப்பவளும், பயத்தைப் போக்கடித்து பண்டன் என்னும் அரக்கனோடு போர் புரிவதில் ஆர்வமுள்ளவளும், புன்னாகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

शैलाधीशसुतां सरोजनयनां सर्वाघविध्वंसिनीं
सन्मार्गस्थितलोकरक्षणपरां सर्वेश्वरीं शाम्भवीम् ।
नित्यं नारदतुम्बुरुप्रभृतिभिर्वीणाविनोदस्थितां
श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत्सदा गोमतीम् ॥ ६ ॥

ஶைலாதீ⁴ஶஸுதாம் ஸரோஜநயனாம் ஸர்வாக⁴வித்⁴வம்ஸினீம்
ஸன்மார்க³ஸ்தி²தலோகரக்ஷணபராம் ஸர்வேஶ்வரீம் ஶாம்ப⁴வீம் ।
நித்யம் நாரத³தும்பு³ருப்ரப்⁴ருதிபி⁴ர்வீணாவினோத³ஸ்தி²தாம்
ஶ்ரீபுந்நாக³வனேஶ்வரஸ்ய மஹிஷீம் த்⁴யாயேத்ஸதா³ கோ³மதீம் ॥ 6 ॥

மலையரசனின் மகளும், தாமரை போன்ற கண்களை உடையவளும், பாவக் கூட்டத்தை நாசம் செய்பவளும், நல்வழியில் உள்ள ஜனங்களைக் காப்பவளும் ஸர்வேச்வரியும், சம்புவின் மனைவியாயும், நாரதர், தும்புரு முதலிய தேவ முனிவர் களுடன், வீணை நாதம் செய்பவளும் புன்னைகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

पापारण्यदवानलां प्रभजतां भाग्यप्रदां भक्तिदां
भक्तापत्कुलशैलभेदनपविं प्रत्यक्षमूर्तिं पराम् ।
मार्कण्डेयपराशरादिमुनिभिः संस्तूयमानामुमां
श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत्सदा गोमतीम् ॥ ७ ॥

பாபாரண்யத³வானலாம் ப்ரப⁴ஜதாம் பா⁴க்³யப்ரதா³ம் ப⁴க்திதா³ம்
ப⁴க்தாபத்குலஶைலபே⁴த³னபவிம் ப்ரத்யக்ஷமூர்திம் பராம் ।
மார்கண்டே³யபராஶராதி³முனிபி⁴: ஸம்ஸ்தூயமாநாமுமாம்
ஶ்ரீபுந்நாக³வனேஶ்வரஸ்ய மஹிஷீம் த்⁴யாயேத்ஸதா³ கோ³மதீம் ॥ 7 ॥

தன்னை அண்டினவர்களின் பாவமாகிற காட்டிற்குத் தீயாயும், பாக்கியத்தை யும் பக்தியையும் ஒருங்கே கொடுப்பவளும், பக்தர்களின் மலைபோன்ற ஆபத்துக்கு வஜ்ராயுதம் போன்றவளும், நேரில் காக்ஷி கொடுப்பவளும், மார்க்கண்டேயர், பராசரர் முதலிய முனிவர்களால் நன்கு துதிக்கப்படுபவளும், உமாதேவியும், புன்னைகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

श्वेतारण्यनिवासिनीं प्रतिदिनं स्तोत्रेण पूर्णाननां
त्वत्पादाम्बुजसक्तपूर्णमनसां स्तोकेतरेष्टप्रदाम् ।
नानावाद्यवैभवशोभितपदां नारायणस्यानुजां meter?
श्रीपुन्नागवनेश्वरस्य महिषीं ध्यायेत्सदा गोमतीम् ॥ ८ ॥

**ஶ்வேதாரண்யநிவாஸினீம் ப்ரதிதி³னம் ஸ்தோத்ரேண பூர்ணனனும்**
**த்வத்பாதா³ம்பு³ஜஸக்தபூர்ணமனஸாம் ஸ்தோகேதரேஷ்டப்ரதா³ம் ।**
**நானுவாத்³யவைப⁴வஶோபி⁴தபதா³ம் நாராயணஸ்யானுஜாம்**
**ஸ்ரீபுந்நாக³வனேஶ்வரஸ்ய மஹிஷீம் த்⁴யாயேத்ஸதா³ கோ³மதீம் ॥ 8 ॥**

மனதாகிற காட்டில் வஸிப்பவளும், தினமும் பக்தர்களின் துதியினுல் மலர்ந்த முகமுடையவளும், தன்திருவடித் தாமரைகளில் எப்பொழுதும் மனதைச் செலுத்திய பக்தர்களுக்கு அளவற்ற வரங்களைக் கொடுப்பவளும், பலவிதமான வாத்தியங்களினுல் விளங்குகிற திருவடிகளை உடையவளும், நாராயணனின் உடன் பிறந்தவளும், புன்னுகவனத் தலைவரின் மனைவியுமான ஸ்ரீகோமதி அம்பிகையை எப்பொழுதும் தியானிக்கின்றேன்.

## इति श्रीगोमत्यम्बाष्टकं सम्पूर्णम् ।

### இதி ஸ்ரீகோ³மத்யம்பா³ஷ்டகம் ஸம்பூர்ணம் ।

ஸ்ரீ ஆதி சங்கரர் இயற்றியதாகக் கருதப்படுகிற ஸ்ரீகோமதி அஷ்டகம் ஸ்ரீ. P. N. நாராயண சாஸ்திரிகள் எழுதிய தமிழுரையுடன் முற்றிற்று.

சிவம்